"சரி... அந்த மிரட்டல் போஸ்டர்களை எந் பிரஸ்ஸுல அச்சிட்டாங்கன்னு ட்ரேஸ் பண்ணீங்களா...?"

"பண்ணிட்டிருக்கோம் ஸார்..."

அவர் சோர்வாய் சொல்லிக் கொண்டிருக்கு போதே - பி.ஏ. ராமலிங்கம் உள்ளே நுழைந்தா நல்லமுத்து நிமிர்ந்தார்.

"என்ன ராமலிங்கம்?"

"ஸார்... கோயமுத்தூர் போலீஸ் ஹெ குவார்ட்டர்ஸிலிருந்து ஒரு நியூஸ். அக்ரோ சர்வீஸ் பர்சேஸிங் மானேஜர் தமிழ்ச் செல்வன் ஹோட்டல் கனிஷ்காவில் மின்சாரம் தாக்கி இறந்து போனதா தகவல்."

நல்லமுத்து அதிர்ச்சியாய் நிமிர்ந்தார்.

"தமிழ்ச் செல்வன் மின்சாரம் தாக்கி மரணமா...? எதிர்க்கட்சிகள் நம்மேல சாட்டியிருக்கும் உர பே ஊழலில் நமக்குச் சாதகமா சாட்சி சொல்ல போகிறவர் அவர்தானே...? மின்சாரம் தாக்கி அவ மரணம்ன்னா என்னால நம்ப முடியலை... கமிஷனர்! தமிழ்ச் செல்வனோட மரணத்தை கொஞ்சம் டீப்பா என்கொயர் பண்ணுங்க..."

"எஸ்... ஸார்..."

"அவர் எதுக்காக கோயமுத்தூர் போனார், என்ன காரணத்துக்காக ஹோட்டல்ல தங்கினார்ன்னு எனக்கு இம்மீடியட்டா தெரியணும்."

"எஸ்... ஸார்..."

கமிஷனர் சல்யூட்டொன்றை விநியோகித்து விட்டு



வேகமாய் அறையை விட்டு வெளியேற - மெஜ மேலிருந்த டெலிபோன் கூப்பிட்டது. ராமலிங்கம் ரிஸீவரைச் செவிமடுத்துவிட்டு - நல்லமுத்துவிடம் திரும்பினார்.

"ஸார்... ஹாஸ்பிடலிலிருந்து தலைமை டாக்டர் பேசறார்."

நல்லமுத்து ரிஸீவரை வாங்கி, "சொல்லுங்க" - என்றார். டாக்டர் பதட்டமாய் சொன்னார். "மினிஸ்டர் சண்முகநேசனோட நிலைமை ரொம்பவும் கவலைக் கிடமாயிருக்கு ஸார்... நீங்க ஹாஸ்பிடலுக்கு வந்து அவரைப் பார்க்க விரும்பினா நீங்க பார்க்கலாம்."

# 9

கோவை ஜி. ஹெச். மத்தியானம் நான்கு மணி. போஸ்ட்மார்ட்டம் நடக்கும் அறைக்கு முன்னால், இன்ஸ்பெக்டர் அசோக்கும் சப்-இன்ஸ்பெக்டர் தீனதயாளனும் விறைப்பாய் நின்றிருக்க - எதிரே கமிஷனர் சீரியஸான முகத்தோடு தெரிந்தார்.

"தமிழ்ச் செல்வன் மின்சார ஷாக் வாங்கி செத்ததா சொன்னீங்க... நீங்க தகவல் கிடைச்சு ஹோட்டல் ரூமுக்கு போய் பார்த்த போது - அவர் எந்த இடத்துல பிணமா கிடந்தார்?"

"பாத்ரூம்ல... கழற்றி வைக்கப்பட்டிருந்த கெய்ஸர் ஹீட்டர்க்குப் பக்கத்துல..."

"அவர் கையில் ஸ்பேனரும் ஸ்க்ரூ டிரைவரும் இருந்தது?"

"எஸ் ஸார்..."

"அவரோட பாடியை மொதல்ல பார்த்த எலக்ட்ரீஷியன்தானே?"

"எஸ் ஸார்..."

"அவர் எப்படி அறைக்குள்ளே போனார்?"

"அவர் போகும்போதே கதவு திறந்திருந்த ஸார்..."

"மிஸ்டர் அசோக்! ஒரு விஷயத்தை கவனிச்சீங்களா? ராத்திரி படுக்கும்போது அவ தன்னோட ரூமை உட்பக்கமா தா போட்டுட்டுத்தானே படுத்திருப்பார்...?"

"ஆமா... ஸார்..."

"எலக்ட்ரீஷியன் போகும்போது, கதவு எப்ப திறந்திருந்தது...?" அசோக்கும் தீனதயாளனு திடுக்கிட்ட மாதிரி ஒருத்தரையொருத்தர் பார்த்து கொண்டார்கள். கமிஷனர் தொடர்ந்து கேட்டார்.

"கனிஷ்கா ஹோட்டல் லாட்ஜர்ஸ் ரிஜிஸ்டர்ப தமிழ்ச் செல்வன் மூன்று நாட்கள் தங்கப் போவதாக சொல்லியிருக்கிறார். ஆனால் ஹீட்டர் ரிப்பேர் என் ரிசப்ஷனுக்கு போன் செய்யும்போது மறுநா காலை நான்கு மணிக்கு ரூமை காலி செய்ய போவதாகச் சொல்லியிருக்கிறார். இந்த முரண்பா கொஞ்சம் உறுத்தலாக இல்லை...?"

அசோக் தலையாட்டினார்.

"யூவார் கரெக்ட் ஸார்..."

"இன்னொரு விஷயமும் அதே மாதிரி உறுத்தல இருக்கு... எலக்ட்ரீஷியனோட ஸ்டேட்மெண்ட்படி ஹீட்டர்ல எந்தப் பபழுதுமில்லை. அ



ஆரோக்கியமாத்தான் இருந்திருக்கு."

"ஸார்..."

"நான் என்ன சொல்ல வர்றேன்னு உங்களுக்குப் புரியுதா?"

"இது ஒரு விபத்தில்லைன்னு சொல்ல வர்றீங்க ஸார்...!"

"கரெக்ட்..."

"தமிழ்ச் செல்வனோட உடம்புல மின்சாரம் பாய்ஞ்சிருக்கே... அது எப்படி ஸார்?"

"இந்த ஒரு பாயிண்ட் தான்... விபத்துங்கிற வார்த்தைக்கு சாதகமா இருக்கு... போஸ்ட்மார்ட்டம் ரிப்போர்ட் என்ன சொல்லுதுன்னு பார்க்கணும்..."

கமிஷனர் சொன்ன அதே விநாடி -

போஸ்ட்மார்ட்டம் முடிந்து, அறையின் கதவைத் திறந்து கொண்டு டாக்டர் வெளிப்பட்டார். கமிஷனரை நோக்கி புன்னகையோடு வந்தார்.

"டாக்டர்...!"

"எஸ்..."

"டிட்... யூ... பைண்ட் எனி அப்நார்மல்டி...?"

"நத்திங்... கரெண்ட் ஷாக் வாங்கித்தான் மரணமடைந்திருக்கிறார்."

"ஏதாவது தாக்கப்பட்ட காயம்?"

"ஒன்றுமில்லை!"

"இது ஒரு கொலையாக இருக்க வாய்ப்பு இருக்கிறதா டாக்டர்...?"

"அப்படித் தெரியவில்லை."

"மரணம் எத்தனை மணிக்கு நேர்ந்திருக்கிறது?"

"நள்ளிரவில்... உத்தேசமாய் பனிரெண்டு மணியிலிருந்து ஒரு மணிக்குள் மரணம் நேர்ந்திருக்கிறது."

"பி. எம். ரிப்போர்ட் எப்போது கிடைக்கும்?"

"இன்னும் ஒரு மணி நேரத்தில்..." - சொன்ன டாக்டர் தன் கோட் பாக்கெட்டில் கையை நுழைத்து நான்காய் மடிக்கப்பட்ட ஒரு கர்ச்சீப்பை எடுத்தார்.

"கமிஷனர் ஸார்... இந்த விபத்து நடப்பதற்கு முன்னால், தமிழ்ச் செல்வனின் அறைக்கு யாரோ ஒரு பெண் வந்திருக்க வேண்டும்."

"எப்படிச் சொல்றீங்க டாக்டர்?"

"இதைப் பார்த்தீங்களா...?"

கர்ச்சீப்பின் மடிப்பைப் பிரித்துக் காட்டினார் டாக்டர்.

மடிப்பின் உள்ளே ஒரு நீலநிற ஸ்டிக்கர் பொட்டு தெரிந்தது. டாக்டர் தொடர்ந்தார். "பாடியை போஸ்ட்மார்ட்டத்திற்கு உட்படுத்துவதற்கு முன்னாடிதான் இதைப் பார்த்தேன். தமிழ்ச் செல்வனோட கழுத்துப் பகுதியில் இது ஒட்டிகிட்டு இருந்தது. இந்த கேசுக்கு எந்த விதத்திலாவது இந்த ஸ்டிக்கர் பொட்டு உபயோகப்படுமான்னு பாருங்க..."

கமிஷனர் அந்த ஸ்டிக்கர் பொட்டை வாங்கிப் பார்த்தார். பார்த்துவிட்டு இன்ஸ்பெக்டரிடம் திரும்பினார். "இதை நீங்க கவனிக்கலையா மிஸ்டர் அசோக்...?"

"ஸாரி ஸார்... கவனிக்கலை..."



டாக்டர் குறுக்கிட்டுச் சொன்னார். "அவர் கவனிச்சிருக்க வாய்ப்பில்லை ஸார்... இந்த ஸ்டிக்கர் பொட்டு மோவாய்க்கும் - கழுத்துக்கும் இடைப்பட்ட பகுதியில் மறைவாய் ஒட்டியிருந்தது."

கமிஷனர் நிமிர்ந்தார். "தேங்க்யூ டாக்டர்...! தமிழ்ச் செல்வனோட மரணம் எனக்கு ஆரம்பத்திலிருந்தே சந்தேகம்தான். அதுக்கு ஏற்ற மாதிரியே - ஒரு பெண் அவரோட அறைக்கு வந்துட்டுப் போனதுக்கான தடயம் கிடைச்சிருக்கு. இதை வெச்சுகிட்டே தமிழ்ச் செல்வனோட மரணத்துக்குக் காரணம் விபத்தா... கொலையா...ங்கிறதை கண்டு பிடிக்க முடியும்ன்னு நான் நினைக்கிறேன்..."

# 10

ஹோட்டல் கனிஷ்காவின் மானேஜரும், ரிசப்ஷனிஸ்டும் கமிஷனர்க்கு முன்னால் வியர்த்து ஒழுகினார்கள். கமிஷனர் உறுமிக் கொண்டிருந்தார்.

"தமிழ்ச் செல்வன் இங்கே தங்க வரும்போது தனியா வந்தாரா? இல்லே... ஒரு பெண்ணோட வந்தாரா?"

"தனியாத்தான் வந்தார் ஸார்..."

"பொய் சொன்னா உதவாது... உண்மையை எப்படியும் கண்டுபிடிச்சுடுவோம்..."

"இல்ல ஸார்... அவர் மட்டும் தனியாத்தான் வந்தார்."

"இந்த ஹோட்டல்ல பிராஸ்டிட்யூஷன் உண்டா?"

"இல்ல ஸார்..." ஹோட்டல் மானேஜர் வியர்த்த

முகத்தை கர்ச்சீப்பால் ஒற்றிக்கொண்டே சொன்னார்.

"எப்பவுமே பிராஸ்டிட்யூஷன் கிடையாதா... இல்லை அப்பப்ப... வர்ற நபர்களைப் பொறுத்து உண்டா?"

"ஹோட்டல் ஆரம்பிச்ச புதுசுல, ஃபாரினர்ஸுக்கு மட்டும் பெண்களை வெளியே இருந்து வரவழைச்சு குடுத்துட்டிருந்தோம் ஸார்... கடந்த ரெண்டு வருஷமா அதுவும்கூட இல்லை."

"நேத்து ராத்திரி தமிழ்ச் செல்வனைத் தேடி எந்த பொண்ணாவது வந்தாளா?"

"வரலை ஸார்..."

"நிச்சயமா உங்களுக்குத் தெரியுமா?"

"தெரியும் ஸார்!"

"நேற்றைக்கு தமிழ்ச் செல்வன் வெளியே எங்கேயாவது போனாரா?"

"போகலை ஸார்... ரூமுக்குள்ளேயே இருந்தார்."

"அதெப்படி உங்களுக்குத் தெரியும்?"

"அவர் வெளியே போகும்போது, ரூமோட சாவியை ரிசப்ஷன் கௌண்டர்லதான் குடுத்துட்டு போவார் ஸார்... அதுவுமில்லாமே அவர் ரெண்டு மணி நேரத்திற்கு ஒரு தடவை டீ குடிப்பார். நேற்றைக்கு மட்டும் அவர் ஆறு டீக்கு ஆர்டர் குடுத்திருக்கார்."

"அவர்க்கு சர்வீஸ் பண்ணின பேரர் யாரு?"

"முஸ்தபா ஸார்..."



"அந்த ஆளைக் கூப்பிடுங்க!"

ஹோட்டல் மானேஜர் கண்ணைக் காட்ட - ரிசப்ஷனிஸ்ட் இளைஞன் அறைக்கு வெளியே போய் - அடுத்த சில நிமிஷங்களில் - நாற்பது வயது முஸ்தபாவோடு வந்தான். கமிஷனர் அவனைப் பற்றி சிறிது விசாரித்துவிட்டு விஷயத்திற்கு வந்தார்.

"தமிழ்ச் செல்வன் நேற்றைக்குப் பூராவும் ரூம்லதான் இருந்தாரா?"

"ஆமா ஸார்..."

"ரூம்ல என்ன பண்ணிட்டிருந்தார்?"

"ஏதோ ஃபைல்களைப் பார்த்துக் குறிப்பெடுத்துட்டு இருந்தார் ஸார்..."

"அவரைப் பார்க்க யாராவது வந்தாங்களா?"

"வரலை ஸார்..."

"நீ எத்தனை மணி வரைக்கும் சர்வீஸ் பண்ணினே?"

"ராத்திரி பத்து வரைக்கும் ஸார்..."

"இந்த ஸ்டிக்கர் பொட்டைப் பார்த்தியா?" காகிதத்தில் மடித்து வைத்திருந்த ஸ்டிக்கர் பொட்டை அவனுக்குக் காட்டினார். "இந்தப் பொட்டு அவரோட கழுத்துல ஒட்டியிருந்திருக்கு... நேற்றைக்குப் பூராவும் வெளியே போகலைன்னு நீயே சொல்லிட்டே... அவர் வெளியே போகலைன்னா - வெளியேயிருந்து யாராவது வந்திருக்கணும்..."

"யா... யார்... வந்தாங்கன்னு எனக்குத் தெரியாது ஸார்... அப்படி வந்திருந்தா ராத்திரி பத்து மணிக்கு மேல்தான் யாராவது வந்திருக்கணும்..."

"அதிலும் ஒரு பொண்ணு வந்திருக்கணும்... இன்ஸ்பெக்டர் அசோக் குக்கிட்டு ஹோட்ட மானேஜரிடம் கேட்டார். "ராத்திரி பத்து மணிக் மேல் எந்தப் பொண்ணாவது லாட்ஜர்னை பார்க்கணும்னு வந்தாளா...?"

ஹோட்டல் மானேஜர் ரிசப்ஷனிஸ்டைப் பார்க் ரிசப்ஷனிஸ்ட் இளைஞன் ஒரு சின்ன சந்தோஷ துள்ளலோடு கையைச் சொடுக்கினான்.

"ஸார்... ஐ... காட் இட்..."

கமிஷனர் அவன் பக்கமாய்த் திரும்பினார்.

"என்ன?"

"ஸார்... இந்த ஸ்டிக்கர் பொட்டு வெச்சிரு பெண்ணை எனக்குத் தெரியும்!"

"தெரியுமா? யாரவள்...?"

"நேற்றைக்கு ராத்திரி பத்தே முக்கால் மணிக் இரண்டு பெண்கள் இங்கே ரூம் கேட்டு வந்தா ஸார். ஒருத்தி பெயர் கல்கா... இன்னொருத்தி பெ மீரா. அந்த இரண்டு பெண்களில் ஒருத்தி - இ நீலநிற ஸ்டிக்கர் பொட்டை வெச்சிருந்த பார்த்தேன்..."

கமிஷனர் பதட்டமானார்.

"அந்தப் பெண்கள் எந்த அறை தங்கியிருக்காங்க?"

"அவங்க மத்தியானமே 'வெகேட்' பண்ணி போயிட்டாங்க ஸார்."

"அந்த லெட்ஜரை எடுத்துட்டு வாங்க... எ அட்ரஸ் குடுத்திருக்காங்கன்னு பார்க்கலாம்..."



ரிசப்ஷனிஸ்ட் இளைஞன் ஓடிப்போய், அந்த லட்ஜரைக் கொண்டு வந்து புரட்டி ஒரு பக்கத்தைக் ாண்பித்தான். கமிஷனர் அட்ரஸைப் படித்து, னசுக்குள் வாங்கினார்.

"திருவனந்தபுரத்திலிருந்து வந்திருக்காங்க..." சப்ஷனிஸ்ட் இளைஞன் சொன்னான். "ரெண்டு பர்க்குமே நல்ல ஃபேமிலி லுக் ஸார்... காலேஜ் கர்ள்ஸ் மாதிரி ட்ரஸ் பண்ணிட்டிருந்தாங்க. ரெண்டு ாள் தங்கப் போறதா சொன்னாங்க. ஆனா ிரன்னு மத்தியானம் வந்து, ரூமை வெகேட் ண்றோம்னு சொல்லி - பத்து நிமிஷத்துல ில்லை செட்டில் பண்ணிட்டு கிளம்பிட்டாங்க..."

"அவங்க ரூம் காலி பண்றப்ப நேரம் என்ன ிருக்கும்?"

"பனிரெண்டு மணி இருக்கும் ஸார்..."

"அந்த ரெண்டு பொண்ணுகளோட டவடிக்கைகளும் சந்தேகப்படற மாதிரி இருந்ததா?"

"நீங்க இந்தக் கேள்வியைக் கேட்கும்போதுதான் நாபகத்துக்கு வருது ஸார்... இன்னிக்குக் காலையில ான் டெட்பாடியைப் பார்த்துட்டு வரும்போது - அந்த ரண்டு பெண்களும் என்கூடவே பேசிட்டு ந்தாங்க... எப்படிச் செத்தார்? தற்கொலையா? பிபத்தா?ன்னு துருவித் துருவிக் கேட்டாங்க..."

கமிஷனர் இன்ஸ்பெக்டரிடம் திரும்பினார்.

"மிஸ்டர் அசோக்! இந்த திருவனந்தபுரம் அட்ரஸை நோட் பண்ணிக்குங்க... கேரள போலீஸை ான்டாக்ட் பண்ணி - அட்ரஸ் உண்மைதானான்னு வரிஃபை பண்ணுங்க. ரெண்டு பொண்ணுகளோட

ஐடென்டிஃபிகேஷனை வாங்கி - ரயில்வே போலீஸுக்குக் கொடுத்து ஸ்டேஷனுக்கு வர பொண்ணுகளை வாட்ச் பண்ணச் சொல்லுங்க..."

"எஸ் ஸார்..." அசோக் தலையாட்டினார்.

# 11

வாணியம்பாடி. ராத்திரி பதினோரு மண காதர்பேட்டையைச் சேர்ந்த ஒரு குறுகலா தெருவில் கல்பகாவும் மீராவும் பர்தா அணிந் நடந்து கொண்டிருந்தார்கள். மீராவின் வயி கொஞ்சம் உப்பலாய் இருந்தது. நொடிக்கொரு த திரும்பித் திரும்பிப் பார்த்தபடி நடந்தார்கள்.

"கல்பகா..."

"ம்..."

"வீட்ல அந்த டாக்டரம்மாவைத் தவிர வே யாராவது இருந்துட்டா...?"

"யாரும் இருக்க மாட்டாங்களாம்... அந்த அம் ஒண்டிக்கட்டை. காவலுக்கு ஒரு நாய் மட் இருக்கிறதா நமக்கு கொடுக்கப்பட்ட தகவல்கள்."

"கர்ப்பிணி வேஷம் எனக்கு நல்லா இருக்கா?"

"நிஜமாவே நீ கர்ப்பமாயிட்ட மாதிரி இருக்கு...!"

இரண்டு நிமிஷ நேரம் நடந்து - அந்தச் சின் பங்களாவின் முன் வந்து நின்றார்கள்.

"டாக்டர் கமலம் ராமசாமி எம். எஸ். இருதய நோ நிபுணர். அரசாங்க மருத்துவ அதிகாரி" - பெய பலகை ஆங்கிலத்திலும் தமிழிலும் சொல்லிய இருவரும் காம்பௌண்ட் கேட்டைத் திற



கொண்டு உள்ளே போனார்கள். வீட்டின் பின்பக்கம் நாய் குரைக்கும் சத்தம் கேட்டது. போர்டிகோ படிகளில் ஏறி - வாசல் கதவில் காலிங் பெல்லைத் தொட்டார்கள். 'டிங் டாங்...' பங்களாவுக்குள்ளே சத்தம் எதிரொலித்து அடங்கியது.

அரை நிமிஷ அவகாசத்துக்குப் பின் -

போர்டிகோ விளக்கு பளீரென்று எரிந்தது.தொடர்ந்து உள்ளே யாரோ நடந்து வரும் சத்தம். கல்பகா, மீராவுக்குக் கண்ணைக் காட்ட - அவள் தன் வயிற்றை இரண்டு கைகளாலும் பிடித்துக் கொண்டு அரைக்கண் சொருகி, கீழ்வரிசைப் பற்களால் உதட்டைக் கடித்து வலியால் துவள்வது போல் நடிக்க ஆரம்பித்தாள்.

கதவுக்குப் பக்கத்திலிருந்த ஜன்னல் திறக்க - அதில் டாக்டரம்மாவின் கொண்டை போட்ட தலை தெரிந்து "யார்?" என்று கேட்டது.

கல்பகா ஆரம்பித்தாள். "டாக்டர்! என்னோட அக்காவுக்கு கடுமையான வயித்து வலி. ஏழு மாச கர்ப்பம் வேற. கொஞ்சம் பார்க்கறீங்களா டாக்டர்? அவ வலியாலே துடிச்சிட்டிருக்கா!"

டாக்டரம்மாள் ஜன்னல் கதவைச் சாத்திவிட்டு - வாசல் கதவைத் திறந்தாள். அவர்கள் உள்ளே வந்ததும் - கதவை மறுபடியும் தாழிட்டாள்.

"உங்களுக்கு எந்த ஊரு?" - டாக்டரம்மாள் கேட்டக்கொண்டே உள்ளேயிருந்த அறைக்கு கூட்டிக்கொண்டு போனாள்.

"இதே ஊர்தான் டாக்டர்..."

"உங்க அக்காவுக்கு இது எத்தனையாவது

மாசம்னு சொன்னே?"

"ஏழாவது மாசம்..."

"அந்தப் பொண்ணை மேஜை மேல ஏறி படுக்க சொல்லு... பர்தாவை எடுத்துடு."

"சரி டாக்டர்..."

மீராவை மேஜையின் மேல் சிரமமாய் ஏற்றி மல்லாக்கப் படுக்க வைத்தாள் கல்பகா. டாக்டரம்மா மெடிக்கல் கிட்டைத் திறந்து - ஸ்டெத்தை எடுப்பதற்குள் - பர்தாவை அகற்றினாள்.

ஸ்டெத்தைக் காதில் பொருத்திக் கொண்டு மீராவின் அடிவயிற்றில் கை வைத்தா டாக்டரம்மாள்.

"எந்த இடத்துல வலி அதிகம்?"

மீரா பாகத்தைக் காட்ட - கையை மேலே கொண் போன டாக்டரம்மாள் ஆச்சர்யப்பட்டாள்.

"வயிறு ரொம்பவும் குழைவா இருக்கே..." சொல்லிக்கொண்டே சேலைக் கட்டைத் தளர்த் உள்ளே பார்த்தவள் - அடிவயிற்றோடு சேர்த் கட்டப்பட்டிருந்த அந்தச் சின்ன ஏர் பில்லோவை பார்த்துவிட்டு, அதிர்ந்து போய் கல்பகாவி திரும்பினாள்.

கல்பகா கையில் பிஸ்டலோடு நின்றிருந்தாள்.

"ஏ... ஏ... ஏய்... என்ன இது...? யா... யார்... நீங்க...

"தமிழ்நாட்டு ஆட்சியை அகற்றப் போ எலக்ட்ரிக் ரோஜாக்கள். முதலமைச் நல்லமுத்துவுக்கு நீங்க ஒரு ஸ்டெப்னிங் விஷயம் நம்ம தமிழ்நாட்டு ஜனங்களுக்



தெரியாது. ஆனா நீங்களும் அவரும் சேர்ந்து ஜெனிவா நாட்டிலிருந்து நம்ம தமிழ்நாட்டுக்கு இலவசமா வந்த, விலை உயர்ந்த மருந்துகளை வெளி மாநில மருந்து கம்பெனிகளுக்கு கள்ளத்தனமா வித்து - லட்சக்கணக்கான பணத்தைக் கொள்ளையடிச்சீங்கங்கிற உண்மை தெரியும். அந்த உண்மையை நீங்க மறைக்கப் பார்க்கறீங்க... நாளைக்கு நல்லமுத்து மேல விசாரணைக் கமிஷன் வந்தாலும் நீங்க ஒரு முக்கிய சாட்சியா இருந்து, அவர் அப்படியெல்லாம் செய்யலைன்னு சொல்லிக் காப்பாத்திடுவீங்க... அதனால..."

டாக்டரம்மாள் வெளிறிப் போய்ப் பின்னுக்கு நகர்ந்தாள்.

மேஜையின் மேல் படுத்திருந்த மீரா எழுந்தாள். ஏர் பில்லோவை வயிற்றினின்றும் உருவி, காற்றை அழுத்தி இறக்கிக் கொண்டே சொன்னாள்.

"மிஸஸ் கமலம் ராமசாமி! டாக்டர் பணி எவ்வளவு உன்னதமான பணி. வெளிநாட்டுக்காரன் இலவசமா குடுத்த மருந்துகளை - நம்ம நாட்டு மருந்து கம்பெனிகளுக்கே வித்து, பணம் சம்பாதிச்சிருக்கீங்களே... அது எவ்வளவு பெரிய கேடு கெட்ட காரியம்..."

டாக்டரம்மாள் முகம் வியர்த்துப் போய், தொண்டையில் குரல் இடறச் சொன்னாள். "நா... நான் வேண்டாம்ன்னுதான் சொ... சொன்னேன். சி.எம். கேட்கலை..."

"பொய் சொல்லாதீங்க டாக்டரம்மா... அந்த மருந்துகளை விக்க ஏற்பாடு பண்ணினதே

நீங்கதான். அது சம்பந்தப்பட்ட ஃபைல்ஸும் உங்ககிட்டேதான் இருக்கு... அந்த ஃபைல்களை எடுத்து - எங்ககிட்டே குடுத்துட்டா - உங்களுக்கு உயிர்ப் பிச்சை. உங்களுக்கு உயிர் வேணுமா...? ஃபைல்ஸ் வேணுமா...?"

டாக்டரம்மாவின் கை நடுங்கியது.

"ஃபை... ஃபைல்ஸை... கு... குடுத்துடனே்..."

"ம்... சீக்கிரமா எடுங்க..." டாக்டரம்மாள் பக்கத்து பீரோவைத் திறந்து நான்கு ஃபைல்களை எடுத்து நீட்டினாள். கல்பகா வாங்கி சரிபார்த்துவிட்டு மீராவிடம் அந்த ஃபைல்களை நீட்டினாள்.

"நம்ம தலைவர் கேட்ட அதே ஃபைல்ஸ்தான்..."

"சரி... டாக்டரம்மாவை என்ன பண்ணலாம்..."

"நீயே சொல்லு..."

"டாக்டரம்மாவோட உடம்புல கரெண்ட் எப்படி பாயுதுன்னு பார்க்கலாமா?"

கமலம் ராமசாமி திக்கித்துப் போய் அவளை பார்க்க - கல்பகா ஒரு சின்னச் சிரிப்போ தொடர்ந்தாள். "டாக்டரம்மா! உங்களை ஸ்டெப்னிய உபயோகப்படுத்துகிற நம்ம சி. எம். மேல ஏகப்பட் ஊழல் புகார்கள். அந்தப் புகார்களையெல்லா பட்டியல் போட்டு, கவர்னர்கிட்டே ஒரு மகஜரா தர போறோம். மத்திய அரசை முறைச்சுட்டிருக்கிற நம் சி. எம். மேல கண்டிப்பா விசாரணைக் கமிஷன் வரு உங்களையும் கமிஷன் விசாரிப்பாங்க. ஊழ செஞ்சது உண்மைன்னு தெரிகிற பட்சத்துல - கே கோர்ட்டுக்குப் போயிடும். கேஸ் கோர்ட்டுக்கு போனா என்னாகும்? குறைஞ்சது ஏழெ



வருஷமாவது உங்களுக்குக் கிடைக்கும். ஜெயில்ல நீலச் சேலை கட்டிக்கிட்டு, களியும் கீரைக் குழம்பும் சாப்பிடற நிலைமை உங்களுக்கு வரலாமா? இந்த வேதனைகளையெல்லாம் அனுபவிக்காமே, ஒரு பத்து நிமிஷத்துல செத்துப் போக என்கிட்டே ஒரு சுலபமான வழி இருக்கு..."

- சொல்லிக் கொண்டே பிஸ்டலைச் சுண்டினாள் கல்பகா. ஒரு சின்ன வெள்ளைப் பந்து மாதிரி அடர்த்தியாய் வெளிப்பட்ட புகை டாக்டரம்மாவின் முகத்தைத் தாக்க - அவள் சில விநாடிகள் ஸ்தம்பித்து - பின் தளர்ந்து மடங்கினாள்.

கல்பகா பர்தாவின் மறைவுக்குள் தொங்கிக் கொண்டிருந்த ஜோல்னா பைக்குள்ளிருந்து, அந்த எலக்ட்ரோ டிவைஸை எடுத்தாள். அதன் காது பக்கங்களில் சுருண்டிருந்த ஒயர்களை நீவி - அதன் முனையில் பொருத்தப்பட்டிருந்த க்ளிப்புகளை - டாக்டரம்மாவின் நெற்றிப் பொட்டுகளில் பொருத்தினாள்.

டிவைஸின் அடித்தட்டில் இருந்த கால்குலேட்டர் போன்ற அமைப்பை உசுப்பி, ஒரு பட்டனைத் தட்டினாள். மின்சாரம் ஆம்பியர் ஆம்பியராய் பாய்ந்தது.

டாக்டரம்மாவின் உடம்பு நா[illegible] விருட் விருட்'டென்று வெட்டிக் கொண[illegible] ஆம்பியர் தாண்டியபோது - மூக்கின் நுனியும், காதுகளின் ஓரங்களும் லேசாய் கறுத்துப் போய் - நிசப்தமானாள்.

"ஆமென்!"

நெஞ்சில் சிலுவைக் குறி போட்டாள் கல்பகா.

"மீரா! ப்ரிஜ் எந்த ரூம்ல இருக்குன்னு பாரு..."

"உள்ளே வர்றப்பவே பார்த்துட்டேன்... இந்த ரூமுக்கு வலது பக்க ரூம். வோல்டாஸ் பிரிஜ். கொஞ்சம் பழைய மாடல்..."

"சரி... அம்மாவைத் தூக்கு..."

தூக்கிக் கொண்டு - வலது பக்கமிருந்த அறைக்குள் நுழைந்தார்கள். ஜீரோ வாட்ஸ் வெளிச்சத்தில் பிரிஜ் தெரிந்தது.

"எப்படிப் போடலாம்?"

"பிரிஜ்ஜுக்குப் பக்கத்திலேயே... கொஞ்சம்... அலங்கோலமா விழுந்து கிடக்கிற மாதிரி மல்லாத்திப் போட்டுடலாம்..."

போட்டார்கள்.

டாக்டரம்மாள் கைகளையும், கால்களையும் பரத்திக் கொண்டு, ஒரு செத்துப் போன கரப்பான் பூச்சிஇ மாதிரி விழுந்து கிடக்க - கைகளில் தோலுறைகளை அணிந்து கொண்டு பிரிஜ்ஜின் கதவைத் திறந்தாள் கல்பகா.

உள்ளே - மேல் தட்டில் பழங்களும் - கீழ்த்தட்டில் வெஜிடபிள்ஸும் ஈரத்தின் மினுமினுப்போடு தெரிய - கதவின் ஷெல்ப்களில் ஷீவாஸ் ரீகல் விஸ்கியும், பீர் பாட்டில்களும் அணிவகுத்திருந்தது.

"டாக்டரம்மா குடிப்பா போலிருக்கே...?"

"இதுவும் நமக்கு நல்லதுதான். பாட்டிலைத் திறந்து அம்மா வாய்ல ஊத்து மீரா! குடி போதையில் போய்... பிரிஜ்ஜை... எசகுபிசகாய்த் தொட்ட திறந்ததினாலே ஷாக் வாங்கி மரணம்ன்னு போலீஸ் ஈஸியா கேஸை முடிச்சுக்குவாங்க..." - கல்பகா



சொல்லிக் கொண்டே பிரிஜ்ஜுக்குப் பின்புறம் போய் மின்சாரத்தை நிமிஷ நேரத்துக்கு அணைத்து அதன் கம்ப்ரஷ்ரில் ஒரு சின்ன எலக்ட்ரீஷிய சில்மிச வேலையைச் செய்துவிட்டு மறுபடியும் ஸ்விட்சைப் போட்டாள். பிரிஜ் வெளிச்சத்தோடு இயங்க ஆரம்பித்தது.

"மீரா..."

"என்ன?"

"பிரிஜ்ஜோட கதவுக் கைப்பிடியைத் தொட்டுடாதே. அதுல இப்போ ஆளைத் தீர்த்துக் கட்டற அளவுக்கு கரெண்ட் வந்துட்டிருக்கு..."

"நான் எதையும் தொடலை... கிளம்பலாமா... நேரமாச்சு..."

"ஒரு நிமிஷம் இரு... கரண்ட் வருதா இல்லையான்னு இன்டிகேட்டர் வெச்சு பார்த்துடறேன்..." - கல்பகா முன் பக்கமாய் வந்து, பிரிஜ் கைப்படி மேல் இன்டிகேட்டரை வைத்துப் பார்த்தாள். இன்டிகேட்டர் தன் கண்ணாடி உடம்புக்குள் வெளிச்சம் காட்டியது.

"ஃபினிஷ்ட்... போலாமா...?"

"ம்... போலாம்... பிரிஜ் கைப்பிடியில் மொதல் மொதல்ல யார் கையை வெச்சு, சாவைத் தழுவிக்கப் போறாங்களோ தெரியலை..."

"நான் சொல்லட்டுமா?"

"சொல்லு..."

"அநேகமாய் ஒரு கான்ஸ்டபிள்."

சிரித்துக் கொண்டே பார்தாக்களில் நுழைந்து -

பங்களாவினின்றும் வெளிப்பட்டு, வீதியில் கொட்டியிருந்த இருட்டுக்கு வந்து வேகமாய் நடக்க ஆரம்பித்தார்கள் மீராவும் கல்பகாவும்.

## 12

ஹோட்டல் கனிஷ்கா.

டெலிபோனில் பேசிவிட்டு - கமிஷனரிடம் வந்தார் இன்ஸ்பெக்டர் அசோக். "கேரளா போலீஸ் ஹெட் குவார்ட்டர்ஸிலிருந்து பேசினாங்க ஸார்... அந்த லேடீஸ் குடுத்திருந்த அட்ரஸ் போகஸ்... அவங்க குறிப்பிட்ட நெம்பர் உள்ள அந்த வீட்ல ஒர கிறிஸ்டியன் கப்புள் இருக்கிறதா சொல்றாங்க..."

கமிஷனர் தாடையைத் தேய்த்தார்.

"நாம எதிர்பார்த்த தகவல்தான்..."

பக்கத்தில் நின்றிருந்த ரிசப்ஷனிஸ்ட் இளைஞன் குறுக்கிட்டான்.

"ஸார்... நான் ஒரு தகவல் சொல்லலாமா?"

"சொல்லுங்க..."

"அந்த ரெண்டு பொண்ணுகளும் ராத்திரி ரூம் எடுத்துத் தங்கின சில நிமிஷங்களுக்கெல்லாம்... மெட்ராஸிலிருந்து அவங்களுக்கு ஒரு ட்ரங்க்கால் வந்தது..."

கமிஷனர் நிமிர்ந்தார்.

"மெட்ராஸிலிருந்தா?"

"ஆமா... ஸார்..."

"எந்த நெம்பரிலிருந்து...?"



"அது எக்ஸ்சேஞ்ச்சுக்குத்தான் தெரியும் ஸார்..."

"அந்தப் பேச்சை நீங்க ஓவர் ஹியர் பண்ணனீங்களா?"

"இல்ல ஸார்..."

"மிஸ்டர் அசோக்...!"

"ஸார்..." அசோக் விறைப்பாய் நின்றார்.

"டெலிபோன் எக்ஸ்சேஞ்சை காண்டாக்ட் பண்ணுங்க. நேற்றைக்கு ராத்திரி பத்தே முக்கால் மணிக்கு மேல் ஹோட்டல் கனிஷ்காவுக்கு மெட்ராஸ் கால் வந்திருக்கு. அது எந்த நெம்பரிலிருந்து வந்திருக்குங்கிறதை நோட் பண்ணுங்க..."

"எஸ் ஸார்..." - அசோக் நகர்ந்து போக, கமிஷனர் ரிசப்ஷன் இளைஞனிடம் திரும்பினார்.

"காலையில் தமிழ்ச் செல்வனோட மரணத்தைப் பத்தி அந்த ரெண்டு பொண்ணுகளும் உங்ககிட்டே விசாரிச்சதா சொன்னீங்க...?"

"ஆமா ஸார்..."

"அதுக்கப்புறம் அவங்க எங்கே போனாங்க?"

"வெளியே புறப்பட்டுப் போனது தான் தெரியும் ஸார்... எங்கே போனாங்கன்னு தெரியாது."

"நடந்து போனாங்களா?"

"நான் கவனிக்கலை ஸார்."

"மிஸ்டர் தீனதயாளன்..."

சப்-இன்ஸ்பெக்டர் தீனதயாளன் "எஸ் ஸார்..." என்றபடி அட்டென்ஷனுக்கு வந்தார். கமிஷனர் அவரை ஏறிட்டபடி சொன்னார்.

"ஹோட்டலுக்கு முன்னாடி ஒரு ஆட்டோ ஸ்டாண்ட் இருக்கு. கவனிச்சிருப்பீங்கன்னு நினைக்கிறேன்..."

"ஆமா ஸார்..."

"அந்த ரெண்டு பொண்ணுகளும் ஏதாவ ஆட்டோவில் ஏறிப் போலனாங்களான்னு விசாரிங்க... ஆட்டோவில் ஏறியிருந்தா, அது எந் ஆட்டோன்னு விசாரிங்க..."

"எஸ் ஸார்..."

சப்-இன்ஸ்பெக்டர் தீனதயாளன் ஹோட்டலி காம்பௌண்ட் கேட்டை நோக்கி வேகமா போனார்.

பத்து நிமிஷங்கள் பறந்திருந்த போது -

இன்ஸ்பெக்டர் அசோக் வந்தார். கமிஷ அருகே போய் விறைப்பாய் நின்று குனிந்து காகிதத்தில் குறித்து வைத்திருந்த டெலிபோ நெம்பரைக் காட்டினார்.

"இந்த நெம்பரிலிருந்துதான் பேசியிருக்கா ஸார்..."

"நெம்பரைக் கான்ஃபிடென்ஷியலா வையுங் நான் மெட்ராஸ் போனதும் பார்ட்டி யாரங்கிற விசாரிச்சுக்கிறேன்..."

அசோக் நகர்ந்து அவர்க்குப் பின்னால் போ நின்றபோது - சப்-இன்ஸ்பெக்டர் தீனதயாளன் ஒ ஆட்டோ டிரைவரோடு கமிஷனரை நெருங்கினா

"ஸார்... இவரோட ஆட்டோவிலதான் அ ரெண்டு பொண்ணுகளும் ஏறிப் போயிருக்காங்



"உம் பேரென்னப்பா...?"

"ஜபார் ஸார்..."

"அந்த ரெண்டு பொண்ணுகளையும் எங்கே கொண்டு போய் எறக்கி விட்டே?"

"மெக்ரிகர் ரோடு டெலிகிராபிக் ஆபீஸ் வாசல்ல ஸார்..."

"வெயிட்டிங்க்ல இருந்தியா?"

"இல்ல ஸார்... டெலிபோன் பேசப் போனா நேரமாகும்ன்னு சொல்லி என்னை அனுப்பி வெச்சுட்டாங்க..."

"ஆட்டோவில் போகும்போது ஏதாவது பேசிட்டு வந்தாங்களா?"

"பேசிட்டு வந்தாங்க ஸார்... ஆனா நான் என்னான்னு கவனிக்கலை..."

"சரி... நீ... போ... உன்னோட வண்டி நெம்பரையும் வீட்டு அட்ரஸையும் சப்-இன்ஸ்பெக்டர் கிட்டே குடுத்துட்டுப் போ..."

"சரி... ஸார்..."

ஆட்டோ டிரைவர் ஜபார் - தீனதயாளனிடம் வர - கமிஷனர் அசோக்கை கூட்டிக்கொண்டு - ஓரமாய் ஒதுங்கினார்.

"மிஸ்டர் அசோக்! நேற்றைக்கு ராத்திரி அந்த ரெண்டு பொண்ணுகளுக்கும் மெட்ராஸிலிருந்து ட்ரங்கால் வந்த அந்த டெலிபோன் நெம்பரை கண்டுபிடிச்சுட்டோம்... இன்னிக்குக் காலையில அந்தப் பெண்கள் - மெக்ரிகர் ரோடு டெலிகிராபிக் ஆபீஸிலிருந்து யாருக்கோ போன்

பண்ணியிருக்காங்க. அதுவும் நிச்சயமா எஸ்.டி காலாகவோ, ட்ரங்காலாகவோ இருக்கலாம். கல்ப அல்லது மீராங்கிற பேர்ல ஸ்லிப் எழுதி – அட்வான் 'பே' பண்ணித்தான் பேசியிருப்பாங்க... அவ எந்த நெம்பர்க்கு போன் பண் பேசியிருக்காங்கங்கிறதை ட்ரேஸ் பண் வேண்டியது உங்க வேலை... டெலிகிரா ஆபீஸுக்குப் போய் – குறிப்பிட்ட அந்த நேரத் எழுதிக் குடுக்கப்பட்ட ஸ்லிப்புகளை வாங் பாருங்க... டெலிபோன் நெம்பரை எடுத்துடலாம்.

கமிஷனர் சொல்லச் சொல்ல –

இன்ஸ்பெக்டர் அசோக் உத்தியோக பவ்யத் தலையை ஆட்டி விஷயத்தைக் கிரகித்துக் கொ – போர்டிகோ வாசலில் நின்றிருந்த பைக் நோக்கிப் போனார்.

# 13

'மக்களின் குறை கேட்கும் நாள்'

– துணி பேனரில் எழுத்துக்கள் கொ கொட்டையாய்த் தெரிய – ஆண்களும் பெண்க தனித்தனி வரிசைகளில் கைகளில் மனுக்க நின்றிருந்தார்கள்.

ராமலிங்கம் அறையினின்றும் வெளியே கும்பலைப் பார்த்துச் சொன்னார். "தாயைப் அன்பு காட்டும் நம் முதல்வர் அவர்கள் உ குறைகளைக் கேட்டு ஆவன செய்வதற்காக ப அறையில் வந்து அமர்ந்திருக்கிறார். அ அவர் மட்டுமே இருப்பார். உடன் யாரும் இ



மாட்டார்கள். எனவே உங்களுடைய குறைகள் துவாக இருந்தாலும் மனம் விட்டுச் சொல்லலாம். உங்களுடைய குறைகள் நியாயமானவைகளாக இருந்தால் உடனுக்குடன் நடவடிக்கை எடுத்துத் ர்த்து வைக்கப்படும்."

கும்பல் உற்சாகமாய் கை தட்டிக் காண்டிருக்கும்போதே – ரோட்டின் எதிர்பக்கத்தில் ந்து நின்ற ஆட்டோவிலிருந்து கல்பகாவும் மீராவும் ந்து இறங்கினார்கள். ஆட்டோவை அனுப்பி ரோட்டைக் கடக்கும்போது மீரா சொன்னாள்.

"கும்பல் அதிகமா இருக்கும் போலிருக்கே?"

"கும்பல் அதிகமா இருந்தாத்தான் நமக்கும் ல்லது..." ஜோல்னா பையை – வலது தோளுக்கு ாற்றிக் கொண்டாள் கல்பகா. உள்ளே எலக்ட்ரோ வைஸ் கொஞ்சமாய் கனத்தது.

ரோட்டைக் கடந்து – முதல்வரின் வீட்டுக்குள் நுழைந்து – பெண்கள் க்யூவில் போய் ட்டிக்கொண்டார்கள். க்யூவில் பெரும்பாலும் ப்பத்துப் பெண்கள்.

பி. ஏ. ராமலிங்கம் வாசலில் நின்று கத்திக் காண்டிருந்தார்.

"முதலில் பெண்கள் வரிசையாக வந்து காரிக்கைகளை முதல்வரிடம் கொடுத்துவிட்டு போகவும். தயவு செய்து முண்டியடித்துக் கொண்டு வேண்டாம். முதல்வர் எவ்வளவு நேரமானாலும் ருந்து உங்கள் குறைகளைக் கேட்டு விட்டுத்தான் பாவார்."

அவர் சொல்லிக் கொண்டிருக்கும்போதே –

'போலீஸ்' என்று நெற்றியில் எழுதப்பட்ட அந்தக் கார் மிதமான வேகத்தில் வந்து போர்டிகோவில் நின்றது.

கமிஷனர் இறங்கினார். ராமலிங்கம் பேச்சை நிறுத்திவிட்டு, அவரை நோக்கி வந்தார்.

"கமிஷனர் ஸார்... என்ன திடீர்ன்னு?"

"கோயமுத்தூரிலிருந்து காலையில்தான் வந்தேன். நான் சி.எம்.மை உடனடியா பார்க்கணும்..."

"இன்னிக்குக் குறை கேட்கிற நாள்..."

"தெரியும்... ஒரு பத்து நிமிஷம் நான் அவர்கூட பேசணும்..."

"இருங்க... கேட்டுட்டு வர்றேன்..."

ராமலிங்கம் உள்ளே போய் விட்டு, இரண்டு நிமிஷம் கழித்து வெளியே வந்தார். கமிஷனரைப் பார்த்துப் புன்னகைத்தார்.

"சீக்கிரமா பேசிட்டுப் போகச் சொன்னார்..."

"தாங்க்யூ..."

கமிஷனர் கதவைத் திறந்து கொண்டு முதல்வரின் அறைக்குள் நுழைந்தார். விறைப்பாய் நின்று சல்யூட்டைப் பதித்தார்.

"வாங்க... உட்காருங்க..."

நல்லமுத்து அவருக்கு எதிரே இருந்த சோபாவைக் காட்டினார். கமிஷனர் உட்கார்ந்ததும் கேட்டார். "தமிழ்ச் செல்வனோட இறப்பைப் பற்றி விசாரிச்சீங்களா?"

"விசாரிச்சேன் ஸார்... தமிழ்ச் செல்வன் இறந்தது விபத்து அல்ல. கொலை செய்யப்பட்டிருக்கிறார் ஸார்..."

நல்லமுத்துவின் நெற்றி சுருங்கியது.

"கொலையா?"

"ஆமா ஸார்... மின்சார அதிர்ச்சியினால் அவர் சாகவில்லை. அவருடைய உடம்பில் மின்சாரம் செலுத்தப்பட்டு சாகடிக்கப்பட்டிருக்கிறார்."

"கொலையாளியைப் பிடிச்சிட்டீங்களா?"

"இல்ல ஸார்... ஆனா 'ஸ்மெல்' பண்ணியிருக்கேன்."

"நீங்க சொல்றது புரியலையே..."

"தமிழ்ச் செல்வனை தீர்த்துக் கட்டினது ரெண்டு பெண்கள் ஸார்..."

"பெண்களா?" நல்லமுத்து அதிர்ச்சியோடு தன் மூக்குக் கண்ணாடியைக் கழற்றிக் கையில் வைத்துக் கொண்டார்.

"ஆமா ஸார்... அந்த ரெண்டு பெண்களும் ராத்திரி பத்தரை மணிக்கு மேல் திருவனந்தபுரத்திலிருந்து வந்திருக்காங்க. தமிழ்ச் செல்வன் ரூம் எடுத்துத் தங்கியிருந்த ஹோட்டல் கனிஷ்காவில் அவங்களும் ரூம் எடுத்துத் தங்கியிருக்காங்க. ராத்திரி ஒரு மணிக்கு மேல் அவரோட ரூமுக்குப் போய் ஏதோ ஒரு வழியில தமிழ்ச் செல்வனோட உடம்புல மின்சாரத்தைச் செலுத்திக் கொன்னிருக்காங்க..."

நல்லமுத்து குறுக்கிட்டார்.

"இந்த ரெண்டு பெண்களும்தான் கொலை செஞ்சிருப்பாங்கன்னு எதை வெச்சு முடிவு பண்ணீங்க?"

"நெத்தியில் வெச்சுக்கிற ஸ்டிக்கர் பொட்டு ஒண்ணு தமிழ்ச் செல்வனோட கழுத்துப் பகுதியில் ஒட்டிட்டிருந்தது ஸார். அதே நிறப் பொட்டை ரெண்டு பெண்கள்ல ஒருத்தி வெச்சிட்டிருந்ததை ஹோட்டல் ரிசப்ஷனிஸ்ட் பார்த்திருக்கார். இது முதல் காரணம். ரெண்டாவது காரணம் – ரெண்டு நாள் தங்கப் போவதாகச் சொன்னவங்க – ஒரு நாள் கூட முழுசா தங்கலே. அன்னிக்கு மத்தியானமே ரூமைக் காலி பண்ணிட்டுப் போயிட்டாங்க..."

நல்லமுத்து கவலையாகி – தன் கன்னத்தை ஆட்காட்டி விரலால் சொறிந்து கொண்டே கமிஷனரை ஏறிட்டார்.

"அந்தப் பெண்களைப் பிடிக்க என்ன ஏற்பாடு பண்ணியிருக்கீங்க?"

கமிஷனர் தன் கையிலிருந்த ஒரு துண்டு பேப்பரை நல்லமுத்துவிடம் நீட்டினார்.

"இதுல ரெண்டு டெலிபோன் நம்பர்களை நோட் பண்ணியிருக்கேன் ஸார்... ரெண்டுமே மெட்ராஸ் டெலிபோன் நம்பர்கள். அந்தப் பெண்கள் இந்த நம்பர்களோடு தொடர்பு கொண்டு பேசியிருக்காங்க." என்றவர் அந்த டெலிபோன் நம்பர்கள் கிடைத்த விவரத்தை சாங்கமாய் சொல்ல, முதல்வர் நல்லமுத்து அந்த நம்பர்களை வாங்கிப் பார்த்தார். கமிஷனர் தொடர்ந்தார். "இதுல ஒரு நம்பர் எம்.எல்.ஏக்கள் தங்கியிருக்கிற ஹாஸ்டலோட போன் நம்பர் ஸார். இந்த ஒண்ணு செக்ரட்டேரியட்டோட நம்பர்..."""

"ஆச்சர்யமாயிருக்கே! இந்த நம்பர்களிலிருந்து



ந்தப் பெண்களோடு... யார்... பேசினாங்கங் றதைக் கண்டு பிடிச்சிட்டீங்களா?"

"அதை இனிமேத்தான் ட்ரேஸ் அவுட் ண்ணணும் ஸார்... எம்.எல்.ஏக்கள் ஹாஸ்டல்ல ருக்கிற டெலிபோன் ஒரு பப்ளிக் டெலிபோன் ாதிரி. எம்.எல்.ஏக்கள் யார் வேணுமின்னாலும் பான் பண்ணலாம். அதே மாதிரிதான் செக்ரட்ரியேட் டலிபோனும்... அந்தப் பெண்களோடு டலிபோனில் பேசின ஆசாமி யார்ங்கிறதை க்ரெட்டாத்தான் ட்ரேஸ் அவுட் பண்ணணும் ஸார்... ந்த ஸ்டிக்கர் பொட்டு விஷயத்தைக்கூட நான் ப்பர்ஸுக்குத் தரலை..."

"குட்! கேஸை ஜாக்ரதையா ஹேண்டில் ண்ணுங்க... விஷயம் வெளியே கொஞ்சம் சிஞ்சாலும் எதிர்க்கட்சியைச் சேர்ந்தவங்க ஷாராயிடுவாங்க..."

"இன்னும் இருபத்து நாலு மணி நேரத்துல ந்தக் கேஸை ஒரு முடிவுக்குக் கொண்டு வர்றேன் ார்..." கமிஷனர் எழுந்து நின்று, சல்யூட் பதித்து ட்டு நகர்ந்தார். அவர் அறையினின்றும் ளிப்பட்டு – போர்டிகோவில் நின்றிருந்த போலீஸ் ரை நோக்கிப் போக, க்யூவில் நின்றிருந்த பகாவும் மீராவும் குப்பத்துப் பெண்களுக்குப் ன்னால் முழுசுமாய் மறைந்து கொண்டார்கள்.

கமிஷனரின் கார் புறப்பட்டுப் போனதும் – ருத்தரையொருத்தர் திகிலோடு பார்த்துக் ாண்டார்கள்.

க்யூ நகர்ந்தது.

ராமலிங்கம் கத்திக் கொண்டிருந்தார். "ஆம்பளைங்கஎல்லாம் அப்படியே உட்காருங்க... பெண்களோட க்யூ இன்னும் ஒரு மணி நேரத்துல முடிஞ்சுடும். நம்ம முதலமைச்சர் உங்களையெல்லாம் பார்க்காமே போக மாட்டார்..." என்று சொன்னவரின் பார்வை க்யூவின் கோடியில் நின்று கொண்டிருந்த கல்பகா - மீராவின் மேல் பட்டதும் வேகமாய் அவர்களை நோக்கி வந்தார்.

"ஏம்மா... பார்த்தா படிச்சவங்க மாதிரி தெரியறீங்க? எதுக்காக க்யூவில் நிக்கறீங்க?"

கல்பகா சொன்னாள். "நாங்க க்ருபா ட்ரஸ்டிலிருந்து வர்றோம். முதலமைச்சரைப் பார்த்து ஒரு பத்து நிமிஷம் பேசணும்."

"என்ன விஷயமாய்?"

"முதலமைச்சர் நிதிக்காக ஒரு லட்ச ரூபாய் நன்கொடை கொடுக்கப் போறோம். அதை முதல்வர் கையில தரணும்ன்னு ஆசை..."

"நிதி கொடுக்க வந்தீங்களா? அப்படியானா நீங்க மொதல்ல வாங்க..." க்யூவினின்றும் அவர்களைப் பிரித்து உள்ளே கூட்டிக்கொண்டு போனார் ராமலிங்கம். மற்ற பெண்கள் கோபமாய்ப் பார்த்தபோது - "வங்க முதலமைச்சர் நிதிக்கு பணம் குடுக்க வந்திருக்காங்கம்மா... கோபிச்சுக்காதீங்க... உங்க குறைகளையெல்லாம் தீர்க்கிறதுக்கு பணம் வேணுமில்லையா?" என்று சொல்லிச் சிரித்தார்.

கல்பகாவும் மீராவும் அவரை விறுவிறுவென்று பின்தொடர்ந்து - போர்டிகோ படியேறி - வராந்தாவில் நடந்து - எதிர்பட்ட தேக்கு மரக் கதவைத்



ள்ளிக்கொண்டு - முதல்வரின் அறைக்குள் நுழைந்தார்கள்.

ராமலிங்கம் கதவைச் சாத்திவிட்டு நல்லமுத்துவை ஒரு இளிப்போடு நெருங்கினார். "யார் வந்திருக்காங்கன்னு பார்த்தீங்களா ஸார்...?"

ஒரு ஃபைலைப் புரட்டிக் கொண்டிருந்த நல்லமுத்து நிமிர்ந்தார். வியப்பில் உதடுகளைப் பிரித்தார். "அட! கல்பகா! மீரா! இப்பத்தான் உங்க ரெண்டு பேரைப் பத்தியும் நினைச்சுட்டிருந்தேன்! உட்காருங்க!"

சோபாவைக் காட்டினார் நல்லமுத்து.

## 14

கல்பகாவும் மீராவும் உட்கார்ந்தார்கள்.

நல்லமுத்து கேட்டார். "என்ன சாப்ட்றீங்க?"

"ஒண்ணும் வேண்டாம் ஸார்..."

"வேர்த்து விறுவிறுத்து போயிருக்கீங்க! ...மலிங்கம் ரெண்டு கூல் டிரிங்க்ஸ் கொண்டு ...ங்க..."

ராமலிங்கம் தலையாட்டிவிட்டு உள்ளேயிருந்த ...ரிஜ்ஜை நோக்கிப் போக - நல்லமுத்து ...ன்னகையோடு கல்பகாவையும் மீராவையும் ...ிட்டார்.

"வாணியம்பாடியிலிருந்து எப்ப வந்தீங்க?"

"இன்னிக்குக் காலையிலதான்..."

"டாக்டரம்மாவை...?"

"முடிச்சுட்டோம்... நேத்து ராத்திரி பதினோரு மணிக்கெல்லாம் முடிச்சுட்டோம்..."

"ஃபைல்ஸ்...?"

"கொண்டு வந்துட்டோம்..."

"தமிழ்ச் செல்வன்கிட்டேயிருந்த உர பேர சம்பந்தப்பட்ட ஃபைல்ஸ்?"

"அதையும் கொண்டு வந்திருக்கோம்..."

ராமலிங்கம் கூல் ட்ரிங்க் பாட்டில்களைக் கொண்டு வந்து டீபாயின் மேல் வைத்தார். நல்லமுத்து ஏறிட்டார்.

"ராமலிங்கம்..."

"ஸார்..."

"என்னை எதிர்க்கட்சித் தலைவர்க்குக் காட்டிக் கொடுக்க முயற்சி பண்ணின தமிழ்ச் செல்வன்கிட்டேயிருந்தும், வாணியம்பாடி டாக்டரம்மாகிட்டேயிருந்தும் கல்பகா, மீரா ஃபைல்களைக் கொண்டு வந்திருக்காங்க... அதை வாங்கி மொதல்ல டெஸ்ட்ராய் பண்ணுங்க... அது கையில உயிரோட இருக்கிற ஒவ்வொரு நிமிஷமும் என்னோட பதவிக்கு ஆபத்து..."

கல்பகா தன் ஜோல்னா பையிலிருந்த – அந்த ஃபைல்களை உருவி நீட்டினாள். ராமலிங்கம் வாங்கிக் கொண்டார்.

கல்பகா கேட்டாள். "ஸார்... கமிஷனர் எதுக்காக வந்துட்டுப் போறார்ன்னு நாங்க தெரிஞ்சுக்கலாமா?" நல்லமுத்து சின்னதாய்ப் புன்னகைத்தார்.



"கொஞ்சம் அதிர்ச்சியான விஷயம்தான்!"

"அதிர்ச்சியான விஷயமா?"

"ஆமா... தமிழ்ச் செல்வனை தீர்த்துக் கட்டறதுக்காக – அவனோட ரூமுக்கு போன சமயத்துல, உங்க ரெண்டு பேர்ல ஸ்டிக்கர் பொட்டு வெச்சிருந்தது யாரு?"

"நா... நான்தான்..."

"அவனைத் தீர்த்துட்டு உன்னோட ரூமுக்கு நீ வரும்போது... உன் நெத்தியில அந்த ஸ்டிக்கர் பொட்டு இருந்ததா?"

"நா... நான் கவனிக்கலை ஸார்..."

"இருந்திருக்காது. ஏன்னா... அந்தப் பொட்டு எப்படியோ உன் நெத்தியிலிருந்து நழுவி – தமிழ்ச் செல்வனோட கழுத்துப் பகுதியில் விழுந்திருக்கு. ஹோட்டல் கனிஷ்காவில் நீ ரூம் எடுக்கும்போது – உன் நெத்திப் பொட்டை அந்த ஹோட்டல் ரிசப்ஷனிஸ்ட் பார்த்திருக்கான். ஹோட்டல்ல தங்கின நீங்க ரெண்டு பேரும்தான் தமிழ்ச் செல்வனோட மரணத்துக்குக் காரணம்ங்கிறதை கமிஷனர் 'ஸ்மெல்' பண்ணிட்டார்."

கல்பகாவும் மீராவும் திக்கித்துப் போய் நல்லமுத்துவையே பார்க்க அவர் தொடர்ந்தார். "அதுவுமில்லாமே... நீங்க எம்.எல்.ஏ. ஹாஸ்டலுக்கு போன் பண்ணி, ராமலிங்கத்துக்கிட்டே பேசினதையும், ராமலிங்கம் செக்ரட்ரியேட்டிலிருந்து உங்களுக்கு போன் பண்ணி பேசினதையும் கமிஷனர் கண்டுபிடிச்சுட்டார். பொது டெலிபோன் நம்பராயிருந்ததினாலே பேசின ஆள் யார்ன்னு

அவாக்குத தெரியலை... ஆனா டெலிபோன
நம்பர்ஸ் அவர் கையில இருக்கு..."

ராமலிங்கம் குறுக்கிட்டார். "ஸார்! கமிஷனர்க்
போன் நம்பர் கிடைச்சு எந்தப் பிரயோஜனமும் இல்
ஸார்... மீரா, கல்பகாவோடு பேசினது நான்தான்னு
அவராலே கண்டு பிடிக்க முடியாது."

நல்லமுத்து புன்னகைத்தார். "இருந்தாலும் நாம
ஜாக்கிரதையா இருக்க வேண்டிய நேரம் இது
ராமலிங்கம். எதிர்க்கட்சித் தலைவரோடு ரகசிய உறவ
வெச்சுக்கிட்டு, என்கூட உறவாடிக்கிட்டே என்னை
சீஃப் மினிஸ்டர் போஸ்டிலிருந்து கீழே இறக்கப்
பார்த்தார் சண்முகநேசன். அவரைத் தீர்த்துக் கட்ட
திட்டம் போட்டு ஆட்களை பைக்ல அனுப்பினோம்.
ஸ்டென் கன்னில் குண்டுகள் தீர்கிற வரைக்கும்
சுட்டிருக்காங்க... நாம அனுப்பி வெச்ச ஆட்கள்.
அப்படியிருந்தும் சண்முகநேசன் சாகலை.
அவர்க்குப் பதிலா பி.ஏ. ஜெகத்ரட்சகனும் கார்
டிரைவரும்தான் செத்தாங்க... இதுவே நமக்கு முதல்
தோல்வி. தமிழ்ச் செல்வனை தீர்த்துக் கட்டற
விஷயத்துல ஒரு ஸ்டிக்கர் பொட்டு மூலமா...
கல்பகாவும் மீராவும் போலீஸினாலே தேடப்படற
நிலைமைக்கு வந்துட்டாங்க. இது நமக்கு
ரெண்டாவது தோல்வி. வாணியம்பாடி டாக்டரம்மா
கமலம் ராமசாமியைத் தீர்த்துக் கட்டினதுல... இவங்க
என்ன தப்பு பண்ணிட்டு வந்திருக்காங்களோ
தெரியலை... அது போலீஸோட என்கொயரிக்குப்
பின்னாடிதான் தெரியும்..."

கல்பகா குறுக்கிட்டுச் சொன்னாள்.



"டாக்டரம்மாவை கச்சிதமா கொன்னிருக்கோம்
ஸார்..."

"சரி... எப்படியோ... ஃபைல்ஸை கொண்டு
ந்துட்டீங்க... அதுவரைக்கும் எனக்கு
ந்தோஷந்தான்... இந்தக் காரியத்துக்காக
ங்களுக்குப் பேசின பணத்தை வாங்கிக்கிட்டு,
காஞ்ச நாளைக்கு எங்கேயாவது தலை மறைவா
ாயிடுங்க..."

"ச... சரி ஸார்..."

"ராமலிங்கம்! இவங்களுக்குப் பேசின பணத்தைக்
காடுத்தனுப்பு..."

ராமலிங்கம் பணம் கொண்டு வருவதற்காக
ள்ளே போக - கல்பகா கூல் ட்ரிங்க் பாட்டிலை
கையில் உருட்டியபபடி கேட்டாள்.

"மினிஸ்டர் சண்முகநேசன் இப்போ
ப்படியிருக்கார் ஸார்...?"

"டாக்டர்ஸ் கை விட்டுட்டாங்க... இருந்தாலும்
னுஷன் கோமா ஸ்டேஜ்ல இருந்துகிட்டே என்னோட
டன்ஷனை அதிகப்படுத்தறார். அந்த ஆளு
சத்தொழியற அன்னிக்குத்தான் எனக்கு நிம்மதி."

"ஸார்... மறுபடியும் நாங்க உங்களைப்
ார்க்கணும்ன்னா... எப்படி ஸார்? போன்
ண்ணவா?"

"வேண்டாம்... ஒரு ஆறு மாசத்துக்கு
ன்னையோ... ராமலிங்கத்தையோ சந்திக்க
யற்சி பண்ணாதீங்க..."

ராமலிங்கம் நோட்டுக் கட்டுகளோடு
உள்ளேயிருந்து வந்தார். அவர் வரவே மேஜை

மேலிருந்த டெலிபோன் வீறிட்டது. ரிசீவரை எடுத்
செவி மடுத்துவிட்டு நல்லமுத்துவிடம் நீட்டினார்.

"ஸார்... கமிஷனர் பேசறார்..."

நல்லமுத்து ரிசீவரை வாங்கி "ஹலோ" என்றா

"ஸார்... ஒரு வருத்தமான செய்தி..."

"என்ன?"

"வாணியம்பாடி டாக்டர் கமலம் ராமசாமிய
தமிழ்ச் செல்வன் பாணியிலேயே மின்சாரத்
செலுத்தி கொலை பண்ணியிருக்காங்க ஸார்..."

"யார்?" - இயல்பான குரலில் கேட்டார் நல்லமுத்

"அந்த ரெண்டு பொண்ணுக தான்..."

"அவங்கதான்னு எப்படித் தெரியும்?"

"விட்னஸ் இருக்கு ஸார்..."

"யாரு?"

"டாக்டரம்மாவுக்கு எதிர் வீட்ல... பரீட்சைக்கு
படிச்சிட்டிருந்த பையன்! ராத்திரி பதினோரு மணிக்
பர்தா போட்டுகிட்டு ரெண்டு பொண்ணுக வந்
டாக்டரம்மா வீட்ல நுழைஞ்சதை பைய
பார்த்திருக்கான்... பிரிஜ்ல ஏதோ சில்மிஷம் பண்ண
டாக்டரம்டாவோட உடம்புல கரெண்ட்டை பா
பண்ணி விபத்து மாதிரி செ
பண்ணியிருக்காங்களாம். வாணியம்பா
இன்ஸ்பெக்டர்-ராகவன் டீடெய்ல்ஸ் குடுத்திருக்கா

"சரி... மத்தியானம் மூணு மணிக்கு மே
போர்ட்ல வந்து என்னைப் பாருங்க... பேசுவோம்..

ரிசீவரை வைத்துவிட்டு மூக்குக் கண்ணாடியை



கழற்றி வேஷ்டியின் நுனியில் பாலீஷ் போட்டுக்கொண்டே, ராமலிங்கத்திடம் திரும்பினார்.

"பணத்தைக் குடுத்துடுங்க..."

மீரா கேட்டாள்.

"ஸார்... கமிஷனர் போன்ல என்ன சொன்னார்?"

"வாணியம்பாடி டாக்டரம்மா கொலையானதைப் பத்தி சொன்னார். நீங்க ரெண்டு பேரும் பர்தா ட்ரஸ்ல போனதை எதிர்வீட்டுல பரீட்சைக்குப் படிக்கிற பையன் பார்த்திருக்கான்."

கல்பகாவும் மீராவும் ஒருத்தரையொருத்தர் பயப் பார்வையால் தடவிக்கொண்டார்கள். கல்பகா தடுமாற்றமான குரலில் சொன்னாள். "ஸார்... நாங்க உடனடியாக ஏதாவது வெளியூர்க்கு கிளம்பிப் போனா... கண்டிப்பா போலீஸ் கையில் மாட்டிக்குவோம். உங்களுக்குத் தெரிஞ்ச, பாதுகாப்பான இடம் ஏதாவது இருந்தா சொல்லுங்க ஸார்... வாரம் பத்து நாள் தங்கி... இந்த அமளியெல்லாம் ஓய்ஞ்ச பின்னாடி நாங்க ஏதாவது ஒரு வெளியூர்க்கு போயிடறோம் ஸார்..."

நல்லமுத்து யோசிக்க – ராமலிங்கம் குறுக்கிட்டுச் சொன்னார். "அவங்க சொல்றதும் நியாயம்தான் ஸார்... கமிஷனர் இந்நேரம் போலீஸ் எந்திரத்தை வேகமாய் முடுக்கி விட்டிருப்பார். பஸ் ஸ்டேண்ட், ரயில்வே ஸ்டேஷன், ஏர்போர்ட் இப்படி எல்லா பக்கமும் போலீஸ் மப்டியில் சுத்திட்டிருப்பாங்க..."

"அப்போ... நீங்க ஒரு காரியம் பண்ணுங்க..."

"என்ன ஸார்...?"

"தாம்பரத்துல உங்களுக்கொரு சின்ன வீடு இருக்கே... அங்கே இவங்களை கூட்டிப் போய் தங்க வெச்சுடுங்க!"

"இப்பவேவா ஸார்...?"

"ஆமா... கல்பகாவும் மீராவும் முன் பக்கம் போய் பக்கவாட்டு வழியாய் பின்பக்கத்துல நின்னுட்டிருக்கிற காருக்கு வந்துடட்டும்... நீங்க அதே வழியில் கார்க்கு போயிடுங்க..."

"சரி... ஸார்..."

கல்பகாவும் மீராவும் எழுந்தார்கள். கை கூப்பினார்கள். "நாங்க வர்றோம் ஸார்..."

நல்லமுத்து சிரித்தார். "தைரியமா போங்க... எது வந்தாலும் நான் பார்த்துக்கிறேன். போலீஸ் உங்களை நெருங்காதபடிக்கு நான் பார்த்துக்கிறேன்."

## 15

தாம்பரம் நகர எல்லைக்கு முன்பாகவே ஒரு செம்மண் பாதைக்குள் கார் திரும்பி, அரை கிலோ மீட்டர் தூரம் போனதும் தென்னை மரங்களுக்கு மத்தியில் அந்மத சின்ன டெரஸ் வீடு தெரிந்தது.

"அந்த வீடா ஸார்...?"

"அதே வீடுதான்..." ராமலிங்கம் சிரித்தார்.

வீட்டின் முன்னால் கொண்டு போய் காரை நிறுத்தினார் ராமலிங்கம். சட்டைப் பாக்கெட்டில் இருந்த சாவியை எடுத்துக்கொண்டு, கீழே இறங்கினார். கல்பகாவும் மீராவும் இறங்கினார்கள்.



பூட்டைத் திறந்தார் ராடலிங்கம். உள்ளே போனார்கள்.

இரண்டு பெரிய அறைகள். கிச்சன், பெட்ரூம், உள்ளே சின்னதாய் பூஜை ரூம்.

"சின்ன வீட்டை ரொம்பவும் நல்லாவே வெச்சிட்டிக்கீங்க ஸார்..."

"அவ ரொம்ப சுத்தம்..."

"அவங்க பேரென்ன ஸார்...?"

"நிரஞ்சனா..."

"வயசு?"

"முப்பது... சின்ன வயசுல புருஷனை இழந்துட்டு – விதவை மறுவாழ்வுக் கோரிக்கை எடுத்துகிட்டு சீஃப் மினிஸ்டர்கிட்டே வந்தா. கண்ணுக்கு வளப்பமா இருந்தா... மறுவாழ்வு குடுத்துட்டேன்... சீஃப் மினிஸ்டரைத் தவிர வெளியே யார்க்கும் தெரியாது..."

"ஸார்..."

"என்ன...?"

"இங்கெல்லாம் போலீஸ் வந்துடாதே...?"

"கண்டிப்பா வரமாட்டாங்க! நீங்க ரெண்டு பேரும் இங்கே ஃப்ரீயா பயமில்லாமே இருக்கலாம்... மளிகைச் சாமான் வேண்டியது இருக்கு. இருக்கிறதை வெச்சு அட்ஜெஸ்ட் பண்ணி... வாரம் பத்து நாளை ஓட்டிடுங்க... அதுக்குள்ளே சி. எம். இந்த தமிழ்ச் செல்வனோட கேஸையும் வாணியம்பாடி டாக்டரம்மாவோட கேஸையும் போலீஸ் பார்வையிலிருந்து திசை திருப்பி விட்டுடுவார்... ம்!"

சொல்லிவிட்டு வீட்டினின்றும் வெளியே வந்து - காரை நோக்கிப் போனார் ராமலிங்கம்.

# 16

இரவு எட்டு மணி. நல்லமுத்து ஏராளமான பதட்டத்தோடு தன் பிரத்யேக அறையில் நடை பயில, சுவரோரமாய் ராமலிங்கம் தலை குனிந்தபடி நின்றிருந்தார். நல்லமுத்து பொரிந்தார்.

"புத்திசாலிப் பொண்ணுகன்னு நினைச்சுத்தான் பொறுப்பை ஒப்படைச்சோம். ஆனா இப்படி பொறுப்பில்லாமே நடந்துக்குவாங்கன்னு எதிர்பார்க்கலையே... போலீஸ் கமிஷனர் அந்தக் கேஸைக் கிளறக் கிளற என்னோட அடிவயிறு கலங்குது ராமலிங்கம்... கல்பகா - மீராகிட்டே போன்ல பேசினது நீங்கதான்னு, தெரிஞ்சா... விஷயம் நாறிடும்..."

"போலீஸ் கமிஷனராலே அதைக் கண்டுபிடிக்க முடியாது ஸார்..."

"அப்படிச் சொல்லாதீங்க... கமிஷனர் ஏமகாதகப் பேர்வழி..."

"இப்ப என்ன பண்ணலாம் ஸார்?"

"மீரா... கல்பகா உயிரோடு இருக்கிற ஒவ்வொரு நிமிஷமும் நமக்கு ஆபத்து ராமலிங்கம்..."

ராமலிங்கம் பதிலுக்கு ஏதோ பேச முற்பட்ட போது -டெலிபோன் சிணுங்கியது.

"ரிசீவரை எடுத்து யார்ன்னு கேளுங்க! கமிஷனரா இருந்தா, நான் ரெஸ்ட் எடுத்திட்டிருக்கிறதா சொல்லுங்க..."

ராமலிங்கம் ரிசீவரை எடுத்து செவி மடுத்தவர் - "சொல்லுங்க டாக்டர்" என்றார்.

"........."

"எப்போ?"

"........."

"நான் சொல்லிடறேன்..." - ரிசீவரை அமர்த்திய ராமலிங்கம் ஒரு புன்னகையோடு நல்லமுத்துவை ஏறிட்டார்.

"ஸார்... நமக்கு முதல் வெற்றி கிடைச்சிருக்கு."

"என்ன சொல்றீங்க?"

"சண்முகநேசன் இறந்துட்டாராம்... உயிர் பிரிஞ்சு அஞ்சு நிமிஷமாகுதாம். தலைமை டாக்டர் உங்களுக்கு விஷயத்தைத் தெரியப்படுத்தச் சொன்னார்..."

"அப்பா!" கண்களை மூடி நிம்மதிப் பெருமூச்சொன்றை விட்டார் நல்லமுத்து. ரொம்ப நாளா எதிர்பார்த்திட்டிருந்த ந்யூஸ்.

"ஹாஸ்பிடலுக்கு போலாமா ஸார்...?"

"கண்டிப்பா போறோம்... அதுக்கு முன்னாடி ஒரு சின்ன காரியம்..."

"என்ன ஸார்?"

"குருமூர்த்தி வெளியே நின்னுட்டிருக்கானா?"

"ஆமா..."

"அவனைக் கொஞ்சம் கூப்பிடுங்க..."

ராமலிங்கம் வெளியே போய் - உருட்டுக் கட்டை

சைஸில் நின்றிருந்த அந்த குருமூர்த்தியை கூட்டிக்கொண்டு வந்தார். நல்லமுத்து அவனை அழைத்து, பக்கத்தில் நிறுத்திக் கொண்டார். "குருமூர்த்தி! நீயும் உன்னோட சகாவும் ரெண்டு நாளைக்கு முன்னாடி பைக்ல போய் சுட்ட சண்முகநேசன்... இப்பத்தான், பத்து நிமிஷத்துக்கு முன்னாடிதான் மண்டையைப் போட்டிருக்கார்..."

"அய்யா..."

"இந்த ராத்திரியில் உனக்கு இன்னொரு வேலை..."

"சொல்லுங்கய்யா..."

"உனக்கு நம்பகமான ஒரு டாக்ஸியை ஏற்பாடு பண்ணிக்க... கூட உன்னோட சகாவையும் கூப்பிட்டுக்கோ... பி.ஏ. ராமலிங்கத்துக்கு சொந்தமான வீடு ஒண்ணு தாம்பரத்துக்கு பக்கத்துல இருக்கு... அவர்கிட்டே அட்ரஸை கேட்டுக்க... ரெண்டு பொண்ணுங்க அங்கே தங்கியிருப்பாங்க... கார்ல இழுத்துப் போட்டுக்கிட்டு ஏதாவது ஒரு சவுக்குத் தோப்புக்குக் கொண்டு போய் பெட்ரோல்ல தெப்பமாய் நனைச்சு நெருப்புக்கு உடம்புகளைக் குடுத்து சாம்பலாக்கி, கடல்ல கரைச்சுட்டு வந்திடுங்க..."

ராமலிங்கம் குறுக்கிட்டு ஏதோ சொல்ல முயன்றபோது, "ராமலிங்கம்... இது அரசியல். முழுக்க முழுக்க அரசியல். நாம கொஞ்சம் சறுக்கினாலும் அதல பாதாளத்துக்கு போயிடுவோம். பாவ புண்ணியங்களை ஒரு அரசியல்வாதி பார்க்க ஆரம்பிச்சா... அவனுக்கு கெட்ட காலம்ன்னு அர்த்தம். இந்த நிமிஷம் நம்முடைய எதிரி கல்பகா - மீராதான். அவங்களுக்கு ஒரு முடிவு கட்டினாத்தான் நாம சந்தோஷமா இருக்க முடியும்."



ராமலிங்கம் ஒன்றும் பேசாமல் மௌனமாய் நிற்க, நல்லமுத்து குருமூர்த்திக்குக் கண்ணைக் காட்டினார்.

"நீ போ... காரியத்தை முடிச்சுட்டு எந்நேரமானாலும் வந்து எனக்குச் சொல்லு!"

"சரிங்கய்யா..."

நல்லமுத்து ராமலிங்கத்திடம் திரும்பினார். "சண்முகநேசனோட உடம்பு மேல வெக்கிறதுக்காக ஒர மலர் வளையத்திற்கு ஏற்பாடு பண்ணிட்டு - என்னை வந்து எழுப்புங்க. நான் கொஞ்ச நேரம் தூங்கறேன்..."

## 17

இரவு மணி பத்து.

கார் வாசலில் வந்து நிற்கும் சத்தம் கேட்டு மீரா கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தாள்.

காரிலிருந்து திம்சு கட்டைகள் மாதிரி மூன்று பேர் இறங்குவதைப் பார்த்து முகம் மாறினாள்.

"யார் நீங்க?"

கேட்டுக் கொண்டிருக்கும்போதே அவள் மீது பாய்ந்து, வாயைப் பொத்தி பிளாஸ்டரை ஒட்டி, கைகளை பின்பக்கமாய் வளைத்துக் கட்டினார்கள்.

"திவாகர்! இன்னொன்றும் உள்ளே இருக்கும்... போய் அமுத்திக்கிட்டு வா..."

திவாகர் வீட்டுக்குள் பாய்ந்து கட்டிலில் குப்புறப்படுத்து தூங்கிக் கொண்டிருந்தவளை வாயைப் பொத்தித் தூக்கிக் கொண்டு வந்தான்.

"வாய் மேலே பிளாஸ்டரை ஒட்டு..."

ஒட்டினார்கள்.

காரின் பின் சீட்டுக்குக் கீழே திணித்தார்கள். கால்களால் அழுத்திக் கொள்ள கார் கிளம்பியது.

அரைமணி நேரப் பயணம்.

கடலையொட்டி ஒதுக்குப்புறமாய் தெரிந்த அந்த சவுக்குத் தோப்புக்குள் கார் நுழைந்து மறைவாய் நின்றது.

மூன்று பேரும் இறங்கினார்கள்.

காரின் பின்சீட்டுக்குக் கீழே இருந்த அவர்களை இழுத்து - மணலில் மல்லாத்தினார்கள்.

திவாகர் டிக்கியைத் திறந்து பெட்ரோல் கேனைக் கொண்டு வந்து, பெட்ரோலை இரண்டு பேர்களின் மேலும் தபதபவென்று ஊற்றினான். கேன் காலியானதும் குருமூர்த்தியிடம் திரும்பினான்.

"குரு! அம்மணிகளுக்கு நீ கொள்ளி வை!"

குருமூர்த்தி தீப்பெட்டியை எடுத்து ஒரு தீக்குச்சியை உரசி பெட்ரோல் அபிசேகம் செய்யப்பட்ட இரண்டு பேரின் மேலும் எறிந்தான்.

'ப்பக்க்க்' என்னும் சத்தத்தோடு நெருப்பு அவர்களை தத்தெடுத்துக் கொள்ள - எரிய ஆரம்பித்தார்கள்.

நெருப்பு கங்குகளோடு -



இரண்டு பேர்களின் உடல்களும் சில விநாடிகள் வரைக்கும் துள்ளி, அடங்கி பின்பு நிசப்தமாய் எரிந்து சாம்பலாக மாற ஆரம்பித்தது.

# 18

வாரம் ஒன்று நகர்ந்திருந்தது.

அன்று காலை பத்து மணி.

பத்திரிகை நிருபர்களுக்கு மத்தியில் உட்கார்ந்திருந்தார் நல்லமுத்து.

சந்தோசமாய் இருந்தார். நிருபர்கள் கேள்விகளைத் தொடுத்துக் கொண்டிருந்தார்கள்.

"தமிழ்ச் செல்வனின் மரணமும், வாணியம்பாடி டாக்டரம்மாவின் மரணமும் ஒரே மாதிரியாய் நிகழ்ந்திருப்பதைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?"

"எதிர்க்கட்சிகளின் திட்டமிட்ட செயல் இது. அவர்களால் ஏவப்பட்ட இரண்டு பெண்கள் இந்தக் கொலைகளைச் செய்திருக்கிறார்கள் என்று போலீஸ் கமிஷனர் கருதுகிறார்."

"எதிர்க்கட்சிகள் எதற்காக அவர்களைக் கொலை செய்ய வேண்டும்?"

"என் மீது கூறப் போகும் ஊழல் குற்றச்சாட்டுக்கு ஆதாரங்களைக் கைப்பற்றும் முயற்சியில் அவர்களைக் கொன்றிருக்கிறார்கள். தமிழ்ச் செல்வன், டாக்டர் கமலம் ராமசாமி வசம் இருந்த சில ஃபைல்கள் காணாமல் போயிருக்கின்றன."

"அமைச்சர் சண்முகநேசன் கொலை செய்யப்பட்டதற்கும், இந்தக் கொலைகளுக்கும் ஏதாவது சம்பந்தம் உண்டா?"

"போலீஸாரின் புலன் விசாரணையில்தான் தெரியும்."

"இந்தக் கொலைகள் சம்பந்தமாய் போலீஸ் யாரையாவது கைது செய்திருக்கிறதா?"

"இல்லை... அரசு நினைத்திருந்தால் சந்தேக வட்டத்திற்குள் வரும் எதிர்க்கட்சிக்காரர்களை யெல்லாம் கட்சி செய்து... உள்ளே தள்ளியிருக்க முடியும். ஆனால் அரசுக்கு எதிர்க்கட்சிகளைப் பழிவாங்கும் எண்ணமில்லை. உண்மைக் குற்றவாளிகளைக் கண்டுபிடிக்கவே முயல்கிறது. என் அருமை நண்பர் சண்முகநேசன் தன் பொன்னுடலில் தோட்டாக்களை ஏந்திக்கொண்டு எதிரிகளுக்கு பலியாகியிருக்கிறார். காலம் அந்தக் கயவர்களைத் தண்டிக்கும்."

ராமலிங்கம் நல்லமுத்துவின் காதருகே குனிந்தார்.

"சார்... இன்னிக்குக் குறை கேட்கும் நாள். வாசல்ல ஜனங்க கும்பல் அதிகமாயிட்டே போகுது..."

நல்லமுத்து எழுந்தார்.

"கேள்விகள் போதும்... மக்களை நான் சந்திக்க வேண்டும். வாரத்தில் எனக்கு மகிழ்ச்சி தரக்கூடிய நாள் எது என்று கேட்டால் – மக்களின் குறைகளையும் அந்தக் குறைகளை உடனுக்குடன் களையும் இந்த நாளே எனக்கு மகிழ்ச்சியான நாள்."

ராமலிங்கம் முன்னால் நடந்து வழிகாட்ட – அவரைத் தொடர்ந்தார் நல்லமுத்து. முன் வாசலில் காத்திருந்த கும்பல் அவரைப் பார்த்ததும் ஆர்ப்பரித்தது.



"முதல்வர்...."

"வாழ்க...!"

நல்லமுத்து கைகளைக் குவித்துக் கொண்டே வராந்தாவில் நடந்து, தன்னுடைய அறைக்குள் போய் நுழைந்து கொண்டார்.

ராமலிங்கம் கேட்டார்.

"ஆட்களை அனுப்பலாமா சார்...?"

"சீக்கிரம் அனுப்புங்க..."

சோபாவில் உட்கார்ந்தார் நல்லமுத்து.

முதலில் ஒரு கிழவி வந்தாள். பென்ஷனை திடீரென்று நிறுத்திவிட்டதாகக் கூறி கண்ணீரில் நனைந்து போன மனுவை நீட்ட, நல்லமுத்து அதை அசுயையாய் வாங்கி ட்ரேயில் போட்டார்.

"பென்ஷன் பணத்தை அனுப்பச் சொல்றேன்... போ.. ஆத்தா..."

கிழவி போனாள்.

மகளிர் புனர்வாழ்வு இல்லத்தைச் சேர்ந்த நான்கைந்து பெண்கள் வந்து, அரசுக்கு சொந்தமான ஒரு கிரௌண்ட் நிலத்தை தானமாகக் கேட்டார்கள்.

"அதிகாரிகளை கலந்தாலோசித்து, உங்களுக்கு சாதகமான பதிலைத் தருகிறேன்."

அவர்கள் அதை நம்பிக் கொண்டு போக –

மூன்றாவதாய் அந்த படுகர் இனத்தைச் சேர்ந்த பெண் தலையில் கறுப்பு அங்கியைப் போர்த்துக் கொண்டு மூக்கிலும் காதிலும் பெரிய பெரிய

வளையங்களோடு வந்தாள். அவளுக்குப் பின்னால் வந்த ராமலிங்கம் நல்லமுத்துவிடம் சொன்னார்.

"சார்... இந்தப் பொண்ணு கோத்தகிரியிலிருந்து வர்றா... உங்ககிட்ட ஒரு பதினைஞ்சு நிமிசம் தனியா பேசணுமாம்..."

"என்ன பேசணுமாம்?"

கேட்டுக் கொண்டே நிமிர்ந்தவரின் கண்கள் அப்படியே உறைந்தன. அந்தப் பெண் தான் கொண்டு வந்திருந்த காக்கிப் பையிலிருந்த அந்தப் பிஸ்டலை எடுத்துக் கொண்டிருந்தாள்.

## 19

"ரா...ரா...ராமலிங்கம்... இ...இ...இவளைப் பா... பாரு..."

ராமலிங்கம் காது கேட்காதவரைப் போல் கதவைச் சாத்திக்கொண்டு வெளியே போய்காவலுக்கு நின்று கொள்ள –

நல்லமுத்து பிஸ்டலோடு நிற்கும் அந்தப் படுகப் பெண்ணைப் பார்த்தார். முகம் மாறினார்.

"நீ... நீ... நீ... நீ..."

"நான் கல்பகா..."

சிரித்த கல்பகா தன் மேலிருந்த அங்கியை உதறினாள். மூக்கிலும் காதுகளிலும் இருந்த வெள்ளி வளையங்களைக் கழற்றிப் பைக்குள் போட்டுக் கொண்டாள். உடம்புக்கு மேலே சுற்றியிருந்த சேலையை உருவி – அதையும் பைக்குள் திணித்துக் கொண்டாள். சல்வார் கம்மீஸோடு நின்றாள்.



நல்லமுத்து அதிர்ச்சியாய் அவளைப் பார்க்க – அவள் பிஸ்டலோடு புன்னகைத்தாள். "இவளைத் தான் எரிச்சு சாம்பலைக் கூட கடல்ல கரைச்சுட்டமே... இவ எப்படி உயிரோடு வந்தான்னு யோசிக்கிறீங்களா சி.எம். சார்? மீராவை எரிச்சுட்டீங்க அது உண்மை. கூட இன்னொரு பொண்ணை எரிச்சீங்களே... அது நானில்லை... நிரஞ்சனா... ராமலிங்கத்தோட சின்னவீடு. வெளியூர் போயிருந்த நிரஞ்சனா அன்னிக்கு சாயந்தரமே திடீர்னு வந்துட்டா... எங்களை அந்த வீட்டுக்குள்ளே பார்த்ததும் அவளுக்கும் அதிர்ச்சி... உங்க ஏற்பாட்டின் பேர்லதான் அந்த வீட்ல தங்கியிருக்கோம்னு தெரிஞ்சதும் சமாதானமாயிட்டா... ராத்திரி சாப்பிட்டு விட்டு நாங்க மூணுபேருமே படுத்துத் தூங்கிட்டிருந்தோம். திடீர்னு எனக்கு பாத்ரூம் போகணும் போல் இருந்தது. எந்திரிச்சு பாத்ரூமுக் நீங்க அனுப்பி வெச்ச ஆட்கள் ஒரு நிமிச அவகாசத்துல மீராவையும், கட்டில்ல தூங்கிட்டிருந்த நிரஞ்சனாவை 'நான்'னு நினைச்சும் கார்ல தூக்கி போட்டுகிட்டு போயிட்டாங்க. பாத்ரூமிலிருந்து நான் வெளியே வந்து பார்க்கும்போது, கார் ஹைவேஸ் ரோட்டைத் தொட்டிருந்தது."

நல்லமுத்துவின் நாக்கும் தொண்டையும் பாழ்கிணறாய் காய்ந்து போயிற்று. ராமலிங்கம் உள்ளே வந்தார். கதவைச் சாத்திக் கொண்டார்.

"கல்பகா... காரியத்தைச் சீக்கிரம் முடி..." – சொல்லிவிட்டு மறுபடியும் போய் வெளியே நின்று கொண்டு ஜனங்களிடம் கத்தினார். "நம் அன்பு

முதல்வர் உங்களையெல்லாம் கண்டிப்பாய் பார்ப்பார். குறைகளைக் கேட்டு உடனே தீர்ப்பார். யாரும் முண்டிக்கொண்டு வராதீர்கள்..."

## 20

நல்லமுத்துவின் முகத்தை நோக்கி பிஸ்டலை சுண்டினாள் கல்பகா.

கொத்தாய் வெளிப்பட்ட புகை அவர் முகத்தை ஒரு சர்ப்பம் போல் தீண்ட நல்லமுத்து கண் சொருகி தள்ளாடினார்.

நல்லமுத்து தள்ளாடி சோபாவிலேயே மல்லாந்து மயக்கமானார்.

கல்பகா பையிலிருந்து எலக்ட்ரோ டிவைஸை எடுத்தாள். அதன் இரண்டு பக்க ஒயர்ச் சுருள்களை நீவி, அதன் முனைகளில் இருந்த வில்லைகளை அவரின் நெற்றிப் பொட்டுகளில் பதித்தாள்.

டிவைஸின் அடித்தட்டில் இருந்த கால்குலேட்டர் அமைப்பை தட்ட கருவி 'ர்ர்ர்ர்' என்று உறுமியது.

கருவியில் மின்சாரம் ஜனனமாகி –

ஆம்பியர் ஆம்பியராய் நல்லமுத்துவின் உடம்பில் பாய – அவருடைய உடம்பு, எறும்புகள் மொய்த்த, அரைகுறை உயிரோடு இருக்கும் பல்லியைப் போல் 'துடுக்... துடுக்'கென்று உதறிக் கொண்டது.

மின்சாரம் அவர் உடம்பில் –

கொஞ்சம் கொஞ்சமாய் குடியேறி உச்சத்துக்குப் போனதும், உடம்பு ஒருமுறை ஸ்பெஷலாய் வெட்டிக்



கொண்டது.

தொடர்ந்து –

சலனமற்ற மோன நிலை.

## 21

கதவைத் திறந்து கொண்டு ராமலிங்கம் உள்ளே வந்தார்.

கிசுகிசுப்பான குரலில் கேட்டார்.

"என்ன கல்பகா... முடிஞ்சதா?"

"ஆச்சு..."

"சரி... நீ அந்தப் பக்கமா இருக்கிற கதவைத் திறந்துகிட்டு பின்பக்கமா போயிடு... இன்னும் பதினைஞ்சு நிமிசத்துக்கு நான் யாரையும் உள்ளேவிட மாட்டேன். நீ அதுக்குள்ளே ஒரு பாதுகாப்பான இடத்துக்குப் போயிடணும்..."

"எப்படியாவது... நான் தப்பிச்சுக்குவேன் ராமலிங்கம் சார்... ஆனா நீங்க?"

"என்னைப் பத்திக் கவலைப்படாதே! கதவுக்கு வெளியே போய் பதினைஞ்சு நிமிசத்துக்கு நல்லமுத்துவைப் பாராட்டிப் பேசிட்டு அப்புறம்... உள்ளே வந்து நல்லமுத்துவோட பிணத்தைப் பார்த்துட்டு கத்துவேன்... எல்லாரும் ஓடிவருவாங்க... உன்னைத் தேடுவாங்க... எம்மேல யார் சந்தேகப்பட முடியும்? நீ கிளம்பு மொதல்ல..."

கல்பகா... பையோடு பின்பக்கமாய் நழுவ –

ராமலிங்கம் கதவுக்கு வெளியே வந்து நின்றுகொண்டார். கும்பலைப் பார்த்து பேச

ஆரம்பித்தார்.

"ஒரு ஏழைப் படுக இனப் பெண்ணின் துயரக் கதையை நம் முதல்வர் நெஞ்சம் உருக கண்களில் நீர் பெருக கேட்டுக் கொண்டிருக்கிறார். அன்புகூர்ந்து எல்லோரும் பொறுமையாய் இருங்கள். முதல்வர் உங்கள் எல்லோரையும் பார்ப்பார். இதைப் போன்ற அன்பு காட்டும் ஒரு முதல்வரை... நாம்... இந்த நூற்றாண்டில்...

(முற்றும்)


## திகில் ஸ்டோரி

மலர்: 2 இதழ்: 6

வெளியிடுபவர் - ஆசிரியர் :
எம்.எஸ்.முருகன்

**அக்ஷயா பப்ளிகேஷன்ஸ்**
56/2, ஸ்ரீராம்பேட்டை தெரு, சி.ஐ.டி. நகர்,
நந்தனம், சென்னை - 600 035.
போன். 044 - 2436 1734





'Thikil Story' Novel Monthly
Owner, Publisher & Editor M.S. **Murugan**,
Published at:
New No. 56/2, Sri Rampet Street, C.I.T. Nagar,
Nandanam. Chennai - 600 035. Phone : 98405 14529